# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 3 • Issue: 5 • July 2016 • Annual Subscription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 5 • ஜூலை 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



இலக்கும்
தேவைகளும்

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

## உள்ளே





" இலக்கு என்றால் என்ன, தேவை என்றால் என்ன என்ற வித்தியாசத்தை மட்டும் நாம் புரிந்து கொண்டால் போதும். வாழ்க்கை முழுவதையும் நாம் இலக்குக்காக விட்டுக் கொடுக்கத் தேவையில்லை. நம் வாழ்க்கை பாதையைத் தீர்மானக்கும் முக்கியமான அம்சங்களில் மட்டும் இலக்கிற்கு முக்கியத்துவம் கொடுத்தால் போதும்.

– ஸ்ரீ பகவத்



# ஸ்ரீ பகவத் பவனில் ஞானமுகாம்

வழங்குபவர் :
**ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : 10–09–2016 சனி காலை 9:30 மணி முதல்
13–09–2016 செவ்வாய் மாலை 3:00 மணி வரை

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்**, திருவருட்சோலை,
பெரியகவுண்டாபுரம், சேலம்.

- ✦ ஆண்களுக்கும் பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது.
- ✦ முன்பதிவு செய்திட இறுதி நாள் : 31-07-2016
- ✦ **அனுமதி இலவசம்.**
- ✦ **நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன...**

முன்பதிவுக்கு

**September Gnana Muhaam** என்று **Type** செய்து உங்கள் பெயர், ஊர், செல் நெம்பர் ஆகிய விவரங்களை SMS அனுப்ப வேண்டுகிறோம்.
SMS அனுப்ப வேண்டிய எண் : 0 9942219065
உங்கள் அனுமதி ஆகஸ்ட் 5க்குள் உறுதி செய்யப்படும்.

மேலும் விபரங்களுக்கு
ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.
கைப்பேசி : 9994205880, 9789165555.

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–**
**ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை **92620 61838** என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



அட்டை படம் : புகைப்பட கலைஞர்
திருச்சி சுதாகர்



This Book Designed By:
**ORANGE DESIGNER SALEM**
Mobile : 9894377433




ஓர் அம்மையார் வெளிநாட்டிலிருந்து தொடர்பு கொண்டு பேசினார்:-

"எனக்கு இரண்டு பையன்கள். மூத்தவன் நன்றாகப் படித்து தற்போது வேலையில் சேர்ந்திடும் நிலையில் உள்ளான். இரண்டாவது பையன் படிப்பில் கவனம் செலுத்த மறுக்கிறான். செல்போனை வைத்துக் கொண்டே ஏதேதோ செய்து நேரத்தை வீணடிக்கிறான். புத்தி சொன்னால் என் மீது கோபப்படுகிறான். அவனை எவ்வாறு நேர் வழிப்படுத்துவது?"

பையனை வழிக்குக் கொண்டு வருவது அம்மாவின் பிரச்சினை.

ஆனால் அந்தப் பையனைப் பொறுத்த அளவில் அவனுடைய பிரச்சினை என்ன?

இந்தச் சந்தர்ப்பத்தில் "இலக்கு" என்றால் என்ன? "தேவைகள்" என்றால் என்ன? என்பதைப் பற்றி சற்றுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**Ideal - Goal** அல்லது இலக்கு என்பதைப் பற்றியும் "தேவை" அல்லது **Demand** என்பதனைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும்.

எனக்குப் பசியாக இருக்கிறது. நல்ல உணவு வேண்டும். இதுதான் தேவை.

-இது தான் **Demand.**

எனக்கு ஒரு நல்ல வேலை வேண்டும். இதுவும் ஒரு தேவை தான். ஆனால் இதனை "தேவை" என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. இதனை இலக்கு என எடுத்துக் கொள்ள வேண்டும்.

தேவைக்கும், இலக்குக்கும் என்ன வித்தியாசம்?

அடிப்படையில் இரண்டும் ஒன்று தான்

தேவை என்பது குறுகிய கால அம்சமுடையது. இலக்கு என்பது நீண்ட கால அம்சமுடையது.

ஒரு மாணவன் மருத்துவராகவோ, கலெக்டராகவோ, ஆவதற்காகப் படிக்கிறான் என்றால் அது இலக்கு.

அவன் டி.வி.யிலும், செல்போனிலும் ஆர்வம் காட்டுகிறான் என்றால் அது இலக்கு அல்ல. அது அவனுடைய தேவை.

தேவையை அப்போதே நிறைவு செய்து கொள்ளலாம். ஆனால் இலக்கு என்பது உடனடியாக நடக்கக் கூடிய ஒன்று அல்ல.

இன்றைய பாடங்களைப் படித்து விட்டு நாளைக் காலையில் டாக்டராகவோ, கலெக்டராகவோ ஆகிவிட முடியாது.

ஆனால் டி.வி. பார்ப்பதும், செல்போனில் விளையாடுவதும், அதனால் மகிழ்ச்சி அடைவதும் அப்போதைக்கப்போதே நிகழ்ந்து விடுகிறது.

டி.வி. பார்ப்பதும், செல்போனில் விளையாடுவதும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. தேவைகள் அனைத்தும் மகிழ்ச்சியை மையமாகக் கொண்டவை.

-**Demand**கள் அனைத்தும் மகிழ்ச்சியை நோக்கியே அமைந்துள்ளன.

ஆனால் நல்ல வேலையில் சேர்ந்திடுவதற்காகப் பாடங்களைப் படிப்பது சிரமமாக இருக்கிறது கஷ்டத்தைக் கொடுக்கிறது. மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை.

-இதுதான் இலக்கு அல்லது **Goal.**

மகிழ்ச்சியைக் கொடுப்பது "தேவை"; கஷ்டத்தைக் கொடுப்பது "இலக்கு".

- இப்படி எடுத்துக் கொள்ளலாமா?

தேவை - **Demand** பற்றி நாம் ஓரளவு தெரிந்து கொண்டுள்ளோம்.

தேவைகள் அனைத்தும் "மகிழ்ச்சி"யுடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளன.

இலக்கு என்பது அப்படி இல்லையா?

இலக்குக்கும் மகிழ்ச்சிக்கும் தொடர்பு இல்லையா?

டாக்டராவதையும், கலெக்டராவதையும் நாம் விரும்புகிறோம். அப்படி ஆவது நமக்கு மகிழ்ச்சியைத் தான் கொடுக்குமே தவிர, வருத்தத்தைக் கொடுக்காது.

நமது "தேவை"களும் மகிழ்ச்சியை நோக்கி அமைந்துள்ளன.

நமது "இலக்கு"ம் மகிழ்ச்சியை நோக்கியே அமைந்துள்ளது.

வருத்தத்தைக் கொடுக்கக்கூடிய ஒன்றை எவரும் இலக்காகக் கொள்ள மாட்டார்.

தேவைக்கும், இலக்குக்கும் என்ன தான் வித்தியாசம்?

"இலக்கு" என்பது நாளைய மகிழ்ச்சி.

"தேவை" என்பது இன்றைய மகிழ்ச்சி.

இளைஞர்கள் - ஆண், பெண் இருவருமே இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இளம் பெண் ஒருவர் ஒருமுறை ஒரு கேள்வியைக் கேட்டார்:

"எனது தோழி ஒருத்தி காதலித்து திருமணம் செய்து கொண்டாள். தனது கணவன் தன்னை நன்றாகப் பார்த்துக் கொள்வதாகக் கூறுகிறாள். காதலித்து திருமணம் செய்து கொள்வது தான் நல்லது என்று கூறுகிறாள். நீங்கள் இது பற்றி என்ன கூறுகிறீர்கள்?"

திருமணம் என்பது "தேவையா?" அல்லது இலக்கா?

காதல் என்பது "தேவையா?" அல்லது இலக்கா?

இது போன்று ஓர் அம்மையார் தனது புதல்வியின் திருமணம் பற்றிக் கேட்டார் :

"எனது மகள் உயர் படிப்பு படித்து நல்ல வேலையில் இருக்கிறாள். அவள் உயர்கல்வி படிக்கும் போது தன்னுடன் பயின்ற வேற்று மொழி பேசும் மாணவன் ஒருவனோடு நட்பாகப் பழகி இருக்கிறாள். அவனைத் திருமணம் செய்யவும் விரும்புகிறாள். நான் சம்மதிக்காவிட்டால் அவனைத் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்றும் கூறுகிறாள். அவளுக்கு நான் என்ன பதில் சொல்வது?"

நமது கேள்வி செல்போனா, பாடப்புத்தகமா என்பதில் ஆரம்பித்து இப்போது காதலா அல்லது திருமணமா என்ற கேள்விக்கு வந்து விட்டது.

அடிப்படையில் தேவையா அல்லது இலக்கா?

– எதற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்?

– எந்த அளவுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்?

இந்தக் கட்டுரை இளைஞர்களுக்காகவும், மாணவர்களுக்காகவும் எழுதப்பட்டுள்ளது.

இதைப் படிக்கும் பெரியவர்கள் இதன் மூலம் தங்கள் வீட்டிலுள்ள இளைஞர்களுக்கும் இக்கருத்தை சேர்த்திட முயல்வார்களாக.

இலக்கை எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும்?

தேவையை எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும்?

கரும்பு என்றால் என்ன என்பது நம் அனைவருக்கும் தெரியும்.

கரும்பு என்பது கணுக்கணுவாக இருக்கும். கடித்தால் இனிக்கும்.

ஒரு முழுக் கரும்பை எடுத்துக் கொண்டால், அடிப்பகுதி கரும்பு மிகவும் இனிப்பாக இருக்கும்.

அடிப்பகுதியிலிருந்து மேல் பக்கமாகச் செல்லச் செல்ல கரும்பின் இனிமைத் தன்மை குறைந்து கொண்டே வரும்.

அடிப்பகுதியிலுள்ள கரும்பின் இனிப்புத் தன்மை 100% என்றால் நுனிக் கரும்பின் இனிப்புத் தன்மை 25% க்கும் குறைவாக இருக்கும்.

உங்கள் கையில் முழுக் கரும்பொன்றைக் கொடுத்து, அதை முழுமையாகச் சாப்பிட்டு முடிக்கச் சொல்லவதாக வைத்துக் கொள்வோம்.

மீதம் வைக்காமல் சாப்பிட வேண்டும்.

அடிப்பகுதியிலிருந்து ஆரம்பித்து நுனிக்கரும்பு வரை சாப்பிடுவீர்களா?

அல்லது நுனிக் கரும்பிலிருந்து ஆரம்பித்து அடிக்கரும்பு வரை சாப்பிடுவீர்களா?

நுனிக் கரும்பிலிருந்து சாப்பிட ஆரம்பித்தோமென்றால்

அடுத்து சாப்பிடச் சாப்பிட இனிப்புத் தன்மை கூடிக் கொண்டே வரும்.

அடிப்பகுதியிலிருந்து சாப்பிட ஆரம்பித்தோமென்றால்,

அடுத்து சாப்பிடச் சாப்பிட இனிப்புத் தன்மை குறைந்து கொண்டே போகும்.

இதில் எந்த முறையில் நீங்கள் சாப்பிடுவீர்கள்?

அடிக் கரும்பிலிருந்து நுனிக் கரும்பா?

அல்லது நுனிக் கரும்பிலிருந்து அடிக் கரும்பா?

அனைவரும் நுனியில் ஆரம்பித்து அடிக் கரும்பில் முடிப்பதையே விரும்புவார்கள்.

நமக்கு மதிய உணவு பரிமாறப்படுகிறது. இரண்டு வகையான காய்கறிக் கூட்டுகளும் அதில் இடம் பெற்றுள்ளன.

அந்தக் காய்கறிக் கூட்டுகளில் ஒன்று மிகவும் சுவையானது. இன்னுமொன்று சுமாரான சுவையுடையது.

இருவகைக் கூட்டுகள் முழுவதையும் நாம் சாப்பிட்டாக வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம்.

இவற்றுள் எதனை முதலில் சாப்பிட்டு முடிப்போம்? எதனை இரண்டாவது சாப்பிட்டு முடிப்போம்?

சுமாரான ருசியுடைய கூட்டைத்தான் முதலில் சாப்பிட்டு முடிப்போம். அதன்பிறகு கடைசியாகத் தான்

சுவை மிகுந்த காய்கறிக் கூட்டைச் சாப்பிட்டு முடிப்போம்.

இறுதியில் கிடைக்கும் இன்பத்துக்காகவும் மகிழ்ச்சிக்காகவும்

ஆரம்பித்தில் கிடைக்கும் அசௌகரியங்களை - சிரமங்களை - வசதிக் குறைவுகளை ஏற்றுக் கொள்வது தான் "இலக்கு" காட்டும் வழி.

நமது உதாரணத்தை சற்று மாற்றிக் கொள்வோம்.

கரும்பு நமக்குக் கொடுக்கப்படுகிறது. ஆனால் முழுக் கரும்பையும் நாம் சாப்பிடத் தேவையில்லை. தேவையான பகுதியைச் சாப்பிட்டு விட்டு மீதியை வைத்து விடலாம்.

இப்போது நாம் எங்கிருந்து சாப்பிட ஆரம்பிப்போம்?

நுனிக் கரும்பை விட்டுவிட்டு சுவையான பகுதியை மட்டுந்தான் சாப்பிடுவோம்.

இது போல் நமக்கு பரிமாறப்படும் உணவு பப்ஃபே முறைப்படி - நாம் விருப்பப்பட்டதை மட்டும் எடுத்துக் கொள்ளும் படி வழங்கப்படுகிறது என வைத்துக் கொள்வோம்.

இப்போது நாம் எதனை எடுத்துக் கொள்வோம்?

சுவை குறைந்ததையா முதலில் எடுத்துக்கொள்வோம்?

சுவையானதை மட்டும் எடுத்துக்கொண்டு, சுவை குறைந்ததை முழுமையாகப் புறக்கணித்து விடுவோம்.

-இப்படி நாம் விரும்பியதை மட்டும் எடுத்துக் கொள்வது தான் "தேவை" - **Demand** காட்டும் வழியாகும்.

தேவை என்பது தற்காலிகமானது. இலக்கு என்பது நிரந்தரத் தன்மை கொண்டது.

தேவைகள் அனைத்தும் மனோமயமானது. இலக்கு என்பது புத்தி சம்பந்தப்பட்டது.

மனம் என்பது அலைபாயும் தன்மையுடையது; மாறிக்கொண்டே இருக்கும் இயல்புடையது; அவசரப்பட்டு முடிவெடுக்கும் தகுதியுடையது.

புத்தி என்பது அறிவு பூர்வமானது; நிதானமாகச் செயல்படும் திறனுடையது; பொறுமையுடன் காத்திருக்கும் சாமர்த்தியமுடையது.

இலக்கை மட்டுமே வைத்துக் கொண்டு இறுக்கமாக வாழ வேண்டும் என்பதைக் கூற முன்வரவில்லை.

இலக்கு என்றால் என்ன, தேவை என்றால் என்ன என்ற வித்தியாசத்தை மட்டும் நாம் புரிந்து கொண்டால் போதும்.

வாழ்க்கை முழுவதையும் நாம் இலக்குக்காக விட்டுக் கொடுக்கத் தேவையில்லை.

நம் வாழ்க்கைப் பாதையைத் தீர்மானிக்கும் முக்கியமான அம்சங்களில் மட்டும் இலக்கிற்கு முக்கியத்துவம் கொடுத்தால் போதும்.

இலக்கு என்பது இன்பத்தை நோக்கமாகக் கொண்டிருந்தாலும்

அதன் பாதையெல்லாம் இன்பமாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை,

கடுமையான உழைப்பு கூட அதன் பாதையாக இருக்கலாம்.

மாணவனைப் பொறுத்த வரையில் பாடங்களை தன்னம்பிக்கையுடனும், அக்கறையுடனும் படித்து நல்ல விதமாகத் தேர்ச்சி பெறுவதைத் தான் இலக்காகக் கொள்ள வேண்டும். அதற்கான சிரமங்களை மனமுவந்து ஏற்றுக் கொள்வது தான் அவனது கடமை.

அதற்காக பாடம், பாடம் என்று அவன் பாடப் புத்தகத்துக்கே பலியாகி விடக்கூடாது.

"தேவை" - மனம் சம்பந்தப்பட்ட ஆரோக்கியமான பொழுது போக்கு அம்சங்களுக்கும் அவன் இடம் கொடுக்க வேண்டும்.

இதுபோல் காதல் என்பது மனம் சம்பந்தப்பட்டது. - "தேவை" சம்பந்தப்பட்டது.

அது தேவை தானே தவிர, இலக்கு அல்ல. - புத்தி சம்பந்தப்பட்டதல்ல.

திருமணம் என்பது "தேவை" சம்பந்தப்பட்டது அன்று. அது "இலக்கு" சம்பந்தப்பட்டது. - புத்தி சம்பந்தப்பட்டது.

ஓர் ஆண் ஒரு பெண்ணைக் கண்டதும் ஈக்கப்படலாம். அது போல் ஒரு பெண்ணும் ஓர் ஆணைக் கண்டதும் ஈர்க்கப்படலாம்.

-விருப்பம் ஏற்படலாம்.

-ஈடுபாடு ஏற்படலாம்.

அதில் எந்தத் தவறும் கிடையாது. அதுதான் மனதின் இயற்கை.

ஆனால் திருமண உறவு என்பது அப்படியன்று, அதை ஆயிரம் காலத்துப் பயிர் என்று விவரிப்பார்கள்.

அதனை அவசரப்பட்டு முடிவு செய்யக்கூடாது.

காதலித்து திருமணம் செய்வதும், அது வெற்றிகரமான வாழ்க்கையாக அமைந்திடுவதும் நிரந்தரமான பொது வழியல்ல. அது விதி விலக்கான வழி. எங்கேயோ ஒன்று வெற்றி பெறலாம்.

பெரியவர்களின் உறுதுணையோடு, குடும்பம், குண நலன்கள், பொருளாதாரம், கல்வி, தோற்றம் ஆரோக்கியம் போன்ற பல அம்சங்களையும் கணக்கிட்டு நிதானமாக முடிவெடுப்பதுதான் நமது நாட்டுக்குப் பொருத்தமானது.

– நல்வாழ்வுக்குப் பொருத்தமானது.





## கவனச்சிதறலில் இருந்து மீள்வது எப்படி?

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

இன்று வேலை பார்க்கும் பலரும் தங்களுடைய இயலாமையை இப்படிக் கூறிவிடுகிறார்கள்:

"என்னால் வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை. என்னுடைய வேலையில் நான் திருப்தியாக இல்லை. எனது வேலை எப்போது வேண்டுமானாலும் போய் விடும் என்ற நிலைமை. அதனால் எப்போதும் மனநிறைவு இன்றிப் பயமும், கவலையும் ஏற்படுகிறது. நான் செய்கிற வேலையில் முழு ஈடுபாடு காட்டமுடியவில்லை. நான் பார்க்கும் வேலை மனதிற்குப் பிடிக்கவில்லை. மனதிற்குப் பிடித்த வேலை பார்த்தால் மனம் நிறைவாக இருக்கும் என்று நினைக்கிறேன். அதே நேரத்தில் பார்த்துக் கொண்டிருக்கும் வேலையை விட்டு விட்டு மனதிற்குப் பிடித்த வேலையை செய்தால் நமக்குத் தேவையான வருமானத்தைத் தருமா? என்ற பயமும் இருக்கிறது."

இது பற்றி நண்பர் ஒருவருடன் உரையாட நேர்ந்தது. இது பலருக்கும் உதவும் என்ற அடிப்படையில் பகிர்கின்றேன். இனி....

**நண்பர்:** நான் ஒரு IT கம்பெனியில் வேலை செய்கிறேன். செய்கிற வேலையில் திருப்தி இல்லை. கவனத்துடன் வேலையைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்ற பயமும், கவலையும் வந்து கொண்டே இருக்கிறது. நான் தினமும் பகவத் ஐயாவின் Video வை Youtube-ல் பார்ப்பேன். பார்த்த நேரம் நன்றாக இருக்கிறது. ஆனால் திரும்பவும் பயமும் கவலையும் வந்து விடுகிறது. நான் செய்யும் வேலையில் முழு ஈடுபாட்டையும் காட்டுவது எப்படி?

**சரவணன் :** பகவத் பாதை படித்திருக்கிறீர்களா?

**நண்பர்:** வெறுமையும் - வேலையும், நினைவும் சிந்தித்தலும் படித்திருக்கிறேன் மேலும் பகவத் ஐயாவின் உரைகளைக் கேட்டிருக்கிறேன்.

**சரவணன் :** தற்போது என்ன பிரச்சனை இருக்கிறது?

**நண்பர்:** பிரச்சினை என்னவென்றால் செய்கிற வேலையில் திருப்தி இல்லை. அதனால் வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை. சும்மா இருக்கிற போது வேறு ஏதாவது வேலை பார்க்கலாமா? என மனம் எண்ணுகிறது.

**சரவணன் :** இப்ப இருக்கிற வேலையையே நிறைவாகச் செய்ய முடியவில்லை என்று கூறுகிறீர்கள். அதற்குள் அடுத்தது ஒரு வேலை செய்யலாம் என்று கூறுகிறீர்கள். அது ஏன்? உங்களுடைய தற்போதைய வேலையைக் கூட நிறைவாகச் செய்ய முடியவில்லை என்று தானே கூறுகிறீர்கள்?

**நண்பர்:** வேலை செய்கிறேன். ஆனால் அந்த வேலையில் ஒரு திருப்தி இல்லை.

**சரவணன் :** உங்களுக்குப் பிடித்த மாதிரி வேலையாக இருந்தால் மனதிற்கு நிறைவாக இருக்கும் என்று நினைக்கிறீர்களா?

**நண்பர் :** ஆமாம், அப்படி ஒரு பக்கம் மனதில் எண்ணம் ஓடிக்கொண்டு தான் இருக்கிறது.

**சரவணன் :** நீங்கள் தற்போது செய்து வருகின்ற வேலையில் எத்தனை ஆண்டுகளாக செய்து வருகிறீர்கள்?

**நண்பர்:** ஒரு நான்கு வருடமாக செய்து வருகிறேன்.

**சரவணன் :** நான்கு வருடமாக அந்த வேலையில் இருக்கிறீர்கள் என்றால், அந்த வேலையில் உங்களுக்கு நான்கு ஆண்டு அனுபவம் உள்ளது என்று தானே அர்த்தம். முதலில் அந்த வேலையில் கவனம் செலுத்துங்கள். எந்த வேலையை மாற்றினாலும் சரி, உங்கள் மனதிற்குப் பிடித்த வேலையாக இருந்தாலும் சரி, அந்த வேலையிலும் எல்லா விதமான பிரச்சினைகளும் இருக்கும். எந்த வேலையாக இருந்தாலும் அந்த வேலைக்குண்டான கஷ்டம் இருக்கவே செய்யும். எதுவும் சுலபம் கிடையாது.

**நண்பர் :** வேலை எளிமையாக - Easy ஆக இருக்க வேண்டும் என்று நான் கூறவில்லை. நானும் கஷ்டப்பட்டு தான் வாழ்க்கையில் முன்னுக்கு வர வேண்டும் என்று நினைக்கிறேன். கஷ்டப்பட்ட குடும்பத்திலிருந்து தான் நானும் வந்திருக்கிறேன்.

**சரவணன் :** அப்படி என்றால் உங்கள் வேலையைக் கவனமாக பாருங்கள்.

**நண்பர்:** அப்படிப் பார்க்க வேண்டும் என்று தான் நினைக்கிறேன். ஆனால் அடிக்கடி செய்கிற வேலையிலிருந்து கவனம் வெளியே சென்று விடுகிறது.

**சரவணன் :** வேலை பார்க்கும் போது கவனம் வெளியே போவதற்கு வருத்தப்பட வேண்டாம். நமது கவனம் வேலையை விட்டு வெளியே சென்று விட்டது என்பது உங்களுக்கு தெரிந்த பிறகு மீண்டும் வேலையில் இணைந்து கொள்ளுங்கள். உங்கள் கவனத்திற்குத் தெரியும் போதெல்லாம் வேலையில் இணைந்து கொள்வதில் ஏதேனும் கஷ்டம் இருக்கிறதா?

**நண்பர்:** இல்லை, தெரியும் போது இணைந்து கொள்ளலாம்.

**சரவணன்:** வேலையில் இணைவதை மட்டும் செய்து கொண்டே வாருங்கள். வேறு எதையுமே யோசிக்கத் தேவையில்லை. உங்களுடைய அன்றைய வேலை என்ன என்பதை ஒரு டைரியில் குறித்து எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அதை எப்படிச் சிறப்பாக செய்வது என்ற குறிப்புகளைக் கூட எழுதி வைத்துக் கொள்ளுங்கள். இப்படிச் செய்யலாமா?

**நண்பர் :** செய்யலாம்.

**சரவணன் :** உங்கள் வேலை சம்மந்தமான வளர்ச்சிக்கு என்ன என்ன தேவையோ அதை எல்லாம் சேகரியுங்கள்.

செய்கிற வேலையில் (Bottom Level) அடிமட்ட அளவிற்கு உங்களால் முடிந்த அளவு முழுமையாக செயல்படுங்கள். இப்படி செயல்படும் போது வேலையில் ஓர் திருப்தி உணர்வு தாமாக ஏற்படும். இது சரிதானே?

**நண்பர் :** சரிதான். கண்டிப்பாக ஏற்படும்.

**சரவணன் :** இப்படிக் கவனத்திற்கு வரும் போதெல்லாம் வேலையில் இணையுங்கள். இவ்வாறு செய்யும் போது நாளடைவில் வேலையிலிருந்து கவனம் வெளியே செல்கிற அளவு கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். வேலையிலிருந்து வெளியே செல்லும் கவனம் குறைந்து கொண்டே வரும். வேலையில் இணையும் நேரம் தானாகவே நாளுக்கு நாள் அதிகரிக்கும்.

**நண்பர் :** நீங்கள் சொல்வது புரிகிறது. எப்படியாவது கவனம் வெளியே செல்வதைக் குறைக்க வேண்டும்.

**சரவணன்:** வேலையிலிருந்து கவனம் வெளியே போவதற்கு வருத்தப்படாதீர்கள். கவனம் வெளியே செல்வதைக் குறைப்பது உங்கள் வேலை அல்ல. உங்களுக்குத் தெரிந்த பிறகு வேலையில் இணைவது மட்டுமே உங்கள் வேலை இதில் ஏதாவது பிரச்சினை இருக்கிறதா?

**நண்பர் :** எதுவும் கிடையாது.

**சரவணன் :** இப்படிச் செயல்படும்போது வேலையை நிறைவாக செய்யும் உணர்வு வரும். வேலையை முழுமையாக செய்வீர்கள். எந்த வேலைக்குப் போனாலும் இப்படிச் செயல்பட்டால் மட்டும் தான் வளர்ச்சி அடையமுடியும். இதைச் செய்வதை தவிர வேறு எந்த வழியும் இல்லை. வேறு ஏதாவது வழி இருக்கிறதா?

**நண்பர் :** வேறு எந்த வழியும் இல்லை. வேலை செய்வது நம் கையில் தான் இருக்கிறது.

**சரவணன் :** ஆமாம். இப்போது உங்களுக்கே தெரிகிறது. வேலையிலிருந்து கவனம் வெளியே செல்வதற்கு வருந்தாமல், தெரியும் போது எல்லாம் இணைந்தால் போதும். ஆரம்பத்தில் 15 நிமிடம் வெளியே சென்ற மனம் நாளடைவில் 10, 8, 6 நிமிடங்கள் என வெளியே செல்லும் அளவு குறையும். இப்படி மாற்றம் ஏற்படுவது நாம் வேலையில் முன்னேற்றம் அடைகிறோம் என்று தானே அர்த்தம்?

**நண்பர் :** ஆமாம். நாம் முன்னேற்றம் அடைகிறோம் என்று தான் அர்த்தம்.

**சரவணன் :** இது தான் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய முதல் வேலை. அடுத்து உங்கள் வேலை சம்பந்தமாக இன்று என்ன செய்ய வேண்டும் என்று 20 குறிப்புகளை குறித்து வைத்துக் கொள்ளலாம். அந்தக் குறிப்புகளை வேலை முடிப்பதற்கு இடையில் 2 முறை நீங்களே ஆய்வு செய்து கொள்ளலாம். இன்றைய வேலையின் முடிவில் நாம் குறித்த 20 குறிப்புகளில் சுமார் 15,16 க்கு மேல் நாம் முடித்திருந்தால் நாம் நன்றாக செயல்பட்டு இருக்கிறோம் என்பது நமக்கே தெரியும். இதைச் செயல்படுத்துவதில் என்ன கஷ்டம்?

**நண்பர் :** எந்த கஷ்டமும் இல்லை.

**சரவணன் :** வேலையில் நிறைவு இல்லை என்றால் நாம் சரியாக வேலை செய்யவில்லை என்பது தான் பொருள்.

**நண்பர் :** கண்டிப்பாக, அது தான் உண்மை.

**சரவணன் :** வேலையிலிருந்து கவனம் வெளியே செல்வதற்கு நாம் காரணம் இல்லை. நமது கவனத்திற்கு வந்த பிறகு வேலையில் இணைவதற்கு நம் செயல் மட்டுமே காரணம். அதை முதலில் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். மேற்சொன்னவைகளை முதலில் சரியாகச் செய்தபிறகு வேலையில் ஓர் நிறைவும், திருப்தியும் வரும். ஓரளவிற்கு நிறைவுக்கு வந்த பிறகு ஓய்வு நேரங்களில் வேறு என்ன செய்யலாம் என்று யோசியுங்கள். இதிலேயே நிறைவு வராதபோது அதற்கு அடுத்தது எதற்கும் போக வேண்டாம் என்று நினைக்கிறேன்.

**நண்பர் :** நீங்கள் சொல்வது வாஸ்தவமாகத்தான் இருக்கிறது. முதலில் செய்கிற வேலையில் திருப்தி இல்லாமல் இருக்கும் போது வேறு எந்த வேலையில் திருப்தி அடைய முடியும்? நியாயம் தான்.

**சரவணன் :** பழைய வேலையிலாவது 4 வருட அனுபவம் இருக்கிறது. புதிய வேலை என்றால் முற்றிலும் புதிய ஒன்று தானே. புதிய வேலையில் நமக்குக் கொஞ்சமாவது அனுபவம் வேண்டும் இல்லையா? புதிய வேலை என்பதால் முதலில் கொஞ்சம் ஆர்வமாகக் கூட இருக்கலாம். அதிலேயும் போகப் போக எல்லாவிதமான சலிப்பும், வெறுப்பும் ஏற்படத் தான் செய்யும். நாம் இதுவரை நான்கு ஆண்டுகளாக சேகரித்த அனுபவத்தை வீண் செய்ய வேண்டாம். புதிய வேலையில் ஈடுபடுவதை விட நமக்கு அனுபவமுள்ள வேலையை நம்மால் சிறப்பாகச் செயல்பட முடியும். நாம் செய்கின்ற வேலையைத் தவிர நாம் முன்னேற்றம் அடைவதற்கு வேறு எந்த வழியும் இல்லை என்று எடுத்துக்கொண்டு செயல்படுங்கள். ஆர்வம் என்பது தானாகவே வந்துவிடும். இது போகவும் உங்களின் தவறுகள் என்ன என்பது உங்களுக்கே தெரியும் இல்லையா? ஒரு கம்பெனியின் நிர்வாகியாக நீங்கள் இருந்தால் ஒரு பணியாளர் எப்படி வேலையைச் செய்ய வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பீர்களோ அப்படி உங்களால் முடிந்த அளவிற்கு நிர்வாகத்திற்காகச் சிறப்பாகச் செயல்படுங்கள். எல்லா நிர்வாகமும் சிறந்த பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு செயல்படும் பணியாளரை எப்போதும் தேடிக்கொண்டே தான் இருக்கிறது.

**நண்பர் :** நன்றாக புரிகிறது.

**சரவணன் :** மிகவும் எளிமையாகத் தான் கூறியிருக்கிறேன். இது போகவும் உங்களின் துறை சம்பந்தமான வளர்ச்சிக்கு என்ன தேவையோ அதை உயர்த்திக் கொள்ளுங்கள். உங்கள் துறையில் உயர்ந்த வளர்ச்சி அடைந்தவர்களின் அணுகுமுறைகளை செயல் திட்டங்களை உங்கள் அறிவுடன் இணைத்துக் கொள்ளுங்கள். இந்தப் புதிய அணுகுமுறையில் உங்கள் வேலையை முடிந்த அளவிற்கு இரங்கி முழுமையாகச் செயல்படுங்கள். வேலையில் பணி நிறைவு நிச்சயம் ஏற்படும்.

**நண்பர் :** ஆமாம் கண்டிப்பாக ஏற்படும். புரிய வைத்ததற்கு மிகவும் நன்றி.

**சரவணன் :** வெகு விரைவில் முழு ஈடுபாட்டுடன் வேலையில் ஈடுபடுகிறேன் என்று உங்களிடமிருந்து போன் வர வேண்டும். இதுவே என் விருப்பம். நன்றி.





# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்,

சமுதாயத்தில் நல்ல செயல்களைச் செய்து, நல்ல மனிதராக வாழ்வது நம் அனைவரின் கடமை.

நல்ல மனிதருக்கான அடையாளங்கள் எவை? நமக்குத் தோன்றும் நல்ல சிந்தனைகளும் நல்ல உணர்வுகளும் தானா?

மோசமான உணர்வுகளும் மோசமான சிந்தனைகளும் தோன்றினால் அவர் மோசமான மனிதரா?

எது நல்ல மனிதரின் அடையாளம்?

எது மோசமான மனிதரின் அடையாளம்?

ஒவ்வொருவருக்கும் அவரவர்களுக்கான தனித்தனியான இயல்பு உண்டு. அவரவர்களின் இயல்புக்குத் தகுந்த எண்ணங்களும் உணர்வுகளும் தோன்றுவது இயற்கை.

நமக்குத் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் நம் கட்டுப்பாட்டில் இல்லை. ஆனால் அதனைத் தொடர்ந்து நாமாக சிந்திக்கும் நமது சிந்தித்தலும் நமது செயலும் நம் கைவசம் மட்டுமே உள்ளன.

நமது தரத்தை நிர்ணயிப்பது நமது எண்ணங்களோ உணர்வுளோ அல்ல மாறாக, நாமாக எடுக்கும் முடிவுகளும் நமது செயல்களும் மட்டுமே.

மனம் எதை வேண்டுமானாலும் காட்டட்டும். அதுதான் அதன் இயல்பு. ஆனால் நாம் எடுக்கும் முடிவுகளும் நமது செயல்களும் நமக்குத் தெரிந்தவரையில் சரியானவைகளாக இருக்க வேண்டும்.

சாதாரண மனிதன் அவன் இயல்பில் இருக்கும் எண்ணங்களோடும் உணர்வுகளோடும் பந்தப்பட்டு இருக்கிறான்.

மனதைப் புரிந்து கொண்டவன், அவற்றோடு போராடாமல் விடுதலையோடு இருக்கிறான்.

உதாரணமாக நமது பழைய நண்பர் ஒருவரை பத்தாண்டு கழித்து சந்திக்கிறோம். பத்தாண்டுக்கு முன்பு பொருளாதாரத்தில் நம்மை விட மிகவும் பின் தங்கி, நம்மிடம் கைமாற்றாக வாங்கிய பணத்தைக்கூட தர இயலாதவராக இருந்தவர், இப்போது தன் உழைப்பால் மிகப்பெரிய தொழிலதிபராக இருக்கிறார். அவரைப் பார்த்தவுடன் நமக்குப் பொறாமை உணர்வு ஏற்படுகிறது என வைத்துக் கொள்வோம். இந்த உணர்வு நல்லதா? அல்லது மோசமானதா?

இது நல்லதும் அல்ல, மோசமானதும் அல்ல. நம் இயல்பிலிருந்து தாமாக வந்தது. இது இயற்கையானது. இந்த உணர்வு வரக்கூடாது என்று இதனோடு போராடத் தேவையில்லை.

நம்மைவிடப பொருளாதாரத்தில் பின் தங்கியவர் கூட பத்தாண்டுகளில் இந்த அளவுக்கு உயர்ந்த நிலைக்கு வந்திருக்கிறார் என்றால், அது அவரது முயற்சிக்குக் கிடைத்த வெற்றி. அவரால் முடியக்கூடியது நாம் முயற்சி செய்தால் நம்மாலும் முடியும் என நாம் நம் செயலுக்குத் தூண்டுகோலாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

இப்படி தாமாகத் தோன்றும் எண்ணங்களோ, உணர்வுகளோ, எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். அவற்றோடு போராடாமல் நாமாக சிந்திக்கும் சிந்தித்தலும் நாமாக செய்யும் செயலும் சரியானவையாக இருக்க வேண்டும்.

நமக்கு எவ்வளவு மோசமான உணர்வு தோன்றினாலும் தவறு இல்லை. அவற்றோடு போராடுவதோ அல்லது அவற்றின் போக்கில் இன்ப நாட்டத்துடன் போவதோ, மட்டுமே அவற்றோடு பந்தப்படுத்தி மோசமான செயலுக்கும் தூண்டுகோலாக அமைந்து விடுகிறது.

மோசமான எண்ணமோ உணர்வோ தோன்றுவதில் தவறில்லை. அவற்றோடு பந்தப்பட்டு மோசமான செயலில் ஈடுபடுவது மட்டுமே தவறானது.

நமக்குத் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் இயற்கை எனப் புரிந்து கொண்டு சரியான முடிவை எடுத்துச் சரியான செயல் செய்வது மட்டுமே நமது கடமை.

அதே போல் ஆயிரம் நல்ல சிந்தனைகள் தோன்றலாம். வெறும் சிந்தனையால் எந்தப் பயனும் இல்லை. அது செயலாக மலர்ந்தால் மட்டுமே பயன்.

செயல் ஒன்றே மாற்றத்தை கொடுக்கக்கூடியது. அது சரியான செயலாக இருக்க வேண்டும்.

பொதுவாக பலரும் பல நல்ல ஆலோசனைகளை வழங்குவார்கள். ஆனால் வெகு சிலரே அதனைச் செயலாக்குவார்கள்.

சிறந்த சிந்தனையாளர்களை விட, சிறந்த செயல் செய்பவர்களே வெற்றியடைகிறார்கள்.

தெளிவு பெற்று விடுதலையோடு இயங்குபவர்கள், அந்த வெற்றியயையும் சுமக்காமல் பல நற்காரியங்களை செய்கிறார்கள்.

இதுவே **நிஷ்காம்ய கர்மம்.**



# ஸ்ரீ பகவத் பவன் - நன்றி அறிவிப்பு

நமது ஸ்ரீ பகவத் பவனின் கட்டட வேலைகள் அனைத்தும் முழுமையாக நிறைவு பெற்று தற்போது பயன்பாட்டிற்கு வந்துள்ளது.

ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் உருவாக்கத்திற்கு தங்களது பங்களிப்பை வழங்கி Founder ஆக இணைந்த அனைத்து உறுப்பினர்களுக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது ஆஸ்ரமத்தில் முதல் நிகழ்ச்சியாக "அக்குபஞ்சர் - குணமாக்கும் கலை" என்னும் 4 நாள் பயிற்சி முகாம் அக்குஹீலர் அ.உமர் ஃப்பாரூக் அவர்களால் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இந்த பயிற்சி முகாமை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தொடங்கி வைத்து ஞானப் புரிதல் என்ற தலைப்பில் உரையாற்றினார்கள். இதில் 40 அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர்.

இயற்கைச் சூழலோடு இவ்விடம் அமைந்திருப்பதால் முகாமில் கலந்து கொண்ட அனைவரும் மகிழ்ச்சியோடும் மனநிறைவோடும் பயிற்சியில் கலந்து கொண்டு பயனடைந்து சென்றனர்.

அ.உமர் ஃப்பாரூக் அவர்கள் இப்பயிற்சி கட்டணம் முழுவதையும் ஸ்ரீ பகவத் பவன் கட்டட நிதிக்கான நன்கொடையாக வழங்கியுள்ளார்கள்.

கட்டடப் பணிக்காக இஞ்னியர் நந்தகுமார் அவர்களுக்கு இன்னும் நான்கு லட்சம் தரவேண்டிய சூழலில் இந்நன்கொடைத் தொகை மிகவும் பேருதவியாக இருந்தது. இது போகவும் மேலும் இஞ்னியர் அவர்களுக்கு 2.75 இலட்சம் தரவேண்டியிருக்கிறது. நமது சிறந்த பணிகளையும் நமது சூழ்நிலையையும் நன்கு உணர்ந்து கொண்ட இஞ்னியர் நந்தகுமார் அவர்கள் அவரது பங்களிப்பாக 25000/- கொடுத்து Founder ஆக இணைத்து கொண்டதோடு மீதித்தொகையை 3 மாதத்திற்குள் தாமதமாகப் பெற்றுக் கொள்ளவும் இசைந்துள்ளார்கள்.

இந்த வகையில் நமக்கு பேருதவி புரிந்த ஹீலர் அ.உமர் ஃப்பாரூக் அவர்களுக்கும் இஞ்னியர் நந்தகுமார் அவர்களுக்கும் நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இம்மாதத்தில் தங்களது பங்களிப்பை வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக (Founder) இணைத்துக் கொண்ட திரு. **சேகர்,** கத்தார் (Qatar)

திரு. **செல்லப்பா,** கோவை.

திருமதி. **சரஸ்வதி,** குடும்பத்தினர், நெல்லை.

திரு. **கண்ணா,** இராஜபாளையம்.

திரு. **கணேசன்,** குளத்தூர்.

மேலும் ஏற்கனவே நன்கொடை வழங்கியிருந்த போதும் மீண்டும் வழங்கிய,

திரு. **செந்தில்,** தர்மபுரி.

ஆகிய அனைவருக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் கட்டட நிதிக்காக வட்டியில்லா கடனாக ரூ.20 லட்சம் பெறப்பட்டுள்ளது. இதனை 2 ஆண்டுக்குள் செலுத்துவதாக உறுதியளித்துள்ளோம்.

மேலும் நமது ஆஸ்ரமத்தின் பராமரிப்புச் செலவுகளையும் மேற்கொள்ள வேண்டியுள்ளது.

எனவே, வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களது மேலான பங்களிப்பை வழங்கி உதவிடுமாறு பணிவுடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் பவனில் வருகின்ற செப்டம்பர் மாதம் 10ம் தேதி முதல் 13ம் தேதி வரை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற உள்ளது. இதற்குக் கட்டணம் எதுவும் இல்லை. ஆர்வமுள்ள அன்பர்கள் விரைவாக முன்பதிவு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்றியுடன்,

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

# சென்னையில் 2 நாள் ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : **30 & 31 ஜீலை 2016 சனி, ஞாயிறு**

நேரம்: காலை 9:30 மணி முதல் மதியம் 1:30 மணி வரை

இடம் : **மைலாப்பூர் சாஸ்திரி ஹால்,** 40, லஸ் சர்ச் ரோடு, மைலாப்பூர், சென்னை.

(பாங்க் ஆப் பரோடா ஜோனல் ஆபீஸ் அடுத்து)

செலவுப் பகிர்வு ரூ. 500/- ஒரு நபருக்கு (2 நாள் டீ & ஸ்நாக்ஸ் உட்பட)

முன்பதிவு மற்றும் மேலும் விபரங்களுக்கு :

94444 02986, 93810 19473, 94451 68353, 95512 53636, 98844 96758, 98405 71262
98404 98083, 89399 68399, 94440 61663, 90426 60818, 98840 63969, 98406 91849







## எனது ஆன்மிகப் பயணம்

எனது பள்ளிப்பருவத்தில் இந்து சமய மாணவர் மன்றம் என்ற அமைப்பில் இருந்துகொண்டு கோயில், பஜனை என்று பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டாலும் எனது முப்பத்தி ஏழாம் வயதில் தான் ஆன்மிக தேடல் தீவிரமடைந்தது.

கிட்டத்தட்ட பத்து வருடங்கள் நான் ஆஸ்துமாவில் கஷ்டப்பட்டேன். ஆயுர்வேதம், சித்தா, ஹோமியோபதி, அலோபதி என எல்லா மருத்துவத்திலும் முயற்சி செய்தும் தற்காலிக பலனே கிடைத்தது.

கடவுள் அருளால் இயற்கை ஆரோக்கிய முகாம் (1993ம் வருட இறுதியில் 15 நாட்கள்) ஒன்றில் கலந்து கொண்டேன் அதோடு எனது ஆஸ்துமா முற்றிலும் குணமாகிவிட்டது.

டாக்டரால் குணப்படுத்தவே முடியாது என்ற ஆஸ்துமா முற்றிலும் குணமானதும் எனது ஆன்மிக தேடுதல் தீவிரமடைந்தது.

பார்க்கும் மற்றும் கேள்விப்படும் எல்லா சாமியார்களிடமும் சென்று அவர்களின் அமைப்புகளில் சேர்ந்து யோகா, தியானம் என பலபல பயிற்சிகளை மேற்கொண்டேன். ரிஷிகேஷ் சென்று இரண்டு மாதம் தங்கி ஆன்மீக பயிற்சி பெற்றேன். அதற்காக எல்லாவிதமான விடுமுறை எடுக்கவும் எல்லோரிடமும் கடன் வாங்கவும் சிறிதும் தயங்கவில்லை.

ஒவ்வொரு அமைப்பிலும் அவர்கள் சொல்லிக்கொடுத்த அத்தனை பயிற்சிகளையும் முறையாகச் செய்தேன். எந்த அமைப்பிலும் அரை குறையாக வெளிவரவில்லை.

நான் இருந்த ஒரு சில அமைப்புகளில் குருவிற்கு சில அவப்பெயர் ஏற்பட்ட போதும் கூட அதற்கு பயந்து விடாமல் அந்த அமைப்பில் இருந்து கொண்டே தீவிர பயிற்சி மேற்கொண்டேன்.

வருடங்கள் உருண்டோடின. ஆனால் எனது தேடுதல் முடிவு பெறவே இல்லை.

ஒவ்வொரு அமைப்பிலும் நல்ல பல ஆன்மிக அனுபவங்கள் கிடைத்தன.

அதே சமயம் குருவின் கருத்தே எனது கருத்தாகவும் மாறியது அவர் யாரை வெறுக்கிறாரோ அவரை எந்தக் காரணமுமின்றி நானும் வெறுத்தேன்.

ஆன்மிகத்தில் மிக முக்கிய தேவை சுதந்திரம்தான் எனக் கூறி வந்த நான், என்னை அறியாமலேயே எனது சுதந்திரத்தைப் பறிகொடுத்திருக்கிறேன் என்பதை பகவத் ஐயாவை சந்தித்த பிறகு இப்போதுதான் உணர்கிறேன்.

ஆறு வருடங்களுக்கு முன்பு பகவத் ஐயாவின் கவலைகள் அனைத்திற்கும் தீர்வு புத்தகம் படித்தேன். ஆனால் அது முழுமையாக எனக்குள் போகவில்லை. காரணம் நான் ஒரு அமைப்பின் கீழ் இருந்ததுதான்.

எனது தேடுதலின் தீவிரத்தால் இறை சக்தி அந்த அமைப்பிலிருந்து வெளியே கொண்டுவந்தது. அதன் பின் சென்ற ஒரு சில அமைப்புகளிலிருந்து எனது தேடுதலுக்கு இங்கு விடை கிடைக்காது எனப் புரிந்து விரைவிலேயே வெளி வந்து விட்டேன்.

இந்த சமயத்தில் எனது நண்பர் மின் அஞ்சலில் பகவத் ஐயாவின் நூல்கள் சிலவற்றை அனுப்பினார்.

புரிதல் நடந்தது. இருந்தாலும் எந்த விதமான பயிற்சியும் இல்லாமல் நான் ஞானம் அடைந்துவிட்டேன் என்று என்னால் நம்ப முடியாமல் இருந்தேன். ஏற்காடு ஞான முகாம் நான் பெற்ற ஞானத்தை அங்கீகரிக்க செய்தது.

இறுதியில் எல்லா ஞானிகளும் சொல்லும் அதே வார்த்தைகளைத்தான் சொல்லவேண்டியதிருக்கிறது. இதற்குத்தான் இவ்வளவு கஷ்டப்பட்டோமா?

ஏற்கனவே நம்மிடம் இருக்கும் இயல்பு நிலை புரியாமல் அனுபவங்கள் பின்னாடி ஓடி ஓடி ஓய்ந்தபோதுதான் ஓய்வின் உண்மை நிலை புரிந்தது. அனுபவத்திற்கும் ஞானத்திற்கும் எந்த தொடர்பும் இல்லை என்பதும் தெளிவானது.

பகவத் ஐயாவின் குருவாக ஏற்றுகொள்ள வேண்டாம் அவரை சக மாணவராக சக தோழராக பார்த்தாலே போதும் என்பது அவரது எளிமையை காட்டுகிறது.

இந்த அமைப்பின் சிறப்பு யாரும் பகவத் அய்யாவை கடவுளாகப் பாவித்துப் பூஜிக்கவில்லை. அவரை சக மனிதராகவே பார்க்கின்றனர். அவரது பேச்சு நடை உடை அனைத்திலும் எளிமையும் உண்மையும் நிலவுகிறது.

புரிதல்தான் ஞானம் என்பதை முதன்முதலில் புரிய வைத்தவர் பகவத் ஐயா தான். எனது தேடுதல் நிறைவடைந்த இடமும் பகவத் ஐயாவிடம் தான்.

பெரிய பெரிய ஆன்மீக அமைப்புகளால் இதுவரை ஒரு ஞானியைக் கூட உருவாக்க முடியவில்லை என்பதே உண்மை. இதை அவர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். எந்தவித தற்பெருமையும் இல்லாமல் ஆயிரக்கணக்கான ஞானிகளை உருவாக்கிவிட்டு அமைதியாக இருக்கிறார் பகவத் ஐயா.

**சதாசிவன் செல்லப்பா,**
கோவை. (98420 79401)



# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற்ற **ஹீலர் உமர் பாரூக்** அவர்களின் **"அக்குபங்சர் - குணமாக்கும் கலை"** 4 நாள் பயிற்சி முகாமில் கலந்து கொண்டவர்கள்



சிறப்பு விருந்தினர் எழுத்தாளர் நாகூர். ரூமி அவர்களுக்கு ஹீலர் உமர் பாரூக் அவர்கள் சான்றிதழ் வழங்கும் போது



சென்னை பகவத் மிஷன் தலைவர் திரு. ரவிச்சந்திரன் அவர்கள் ஹீலர் உமர் பாரூக் அவர்களை கௌரவிக்கும் போது



ஸ்ரீ பகவத் பவனில் ஸ்ரீ பகவத் ஐயாவின் உரை



திரு ரவிசங்கர் அவர்கள் Smash Yours Sorrows நூலை வெளியிட சென்னை திருமதி. வடிவு அம்மாள் பெறும்போது.



ஜென் கதை

# பிரதிபலிக்காத கண்ணாடி

இளைஞன் ஒருவன் வெகு நாளாக ஞானத் தேடுதலில் ஈடுபட்டிருந்தான். பல குருமார்களை சந்தித்தான். மனதில் தோன்றும் எண்ணங்களே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணம், எண்ணங்களே துன்பங்களைக் கொண்டுவருகின்றன, எண்ணங்களிலிருந்து விடுதலை கிடைக்க வேண்டும், என்று எண்ணமற்ற நிலையே மிக உயர்ந்த முக்தி நிலை என அதற்கான முயற்சியில் இறங்கினான்.

பலரின் அறிவுரைகளையும் கேட்டு, நூல்களையும் படித்து சுவாசப் பயிற்சிகள் பல செய்தான். தியானங்களில் ஆழ்ந்து போனான். பல ஆன்மிக அனுபவங்களைப் பெற்றான். ஆனால் எண்ணமற்ற நிலை மட்டும் ஏற்படவேயில்லை. விடுதலையும் கிடைக்கவே இல்லை.

மிகவும் சோர்ந்து போன நிலையில், அருகில் உள்ள ஓர் ஊரில் ஞானி ஒருவர் வந்திருப்பதாகவும் மிக எளிமையாக ஞானத்தெளிவு கொடுப்பதாகவும் கேள்விப்பட்டு அவரைச் சந்தித்தான்.

"ஐயா நான் தெளிவுபெற்று விடுதலை அடைய ஒரு வழி சொல்லுங்கள்" என்றான்.

''எதனிடம் இருந்து விடுதலை வேண்டும்? எதற்காக வேண்டும்?" என்றார் ஞானி.

" என் மனப்பிரச்சினைகளில் இருந்து விடுதலை வேண்டும். என் எண்ணங்களே பிரச்சினைகளைக் கொண்டுவருகின்றன. நான் எண்ணமற்ற நிலையைக் கொண்டுவர வேண்டும் அதற்கான வழி கூறுங்கள்" என்றான்.

ஞானி அவரை சற்று உற்றுப் பார்த்துவிட்டு, "பிரதிபலிக்காத கண்ணாடியைக் கொண்டுவா.. உனக்கு எண்ணமற்ற மனதைப் பெறுவதற்கான வழி சொல்லுகிறேன்" என்றார் ஞானி.

இளைஞன் திகைப்படைந்தான். "பிரதிபலிக்காத கண்ணாடியா? பிரதிபலிக்காவிட்டால் அது கண்ணாடியே இல்லையே. எப்படி பிரதிபலிக்காத கண்ணாடியை கொண்டு வருவது?" என வினவினான்.

"எண்ணங்கள் தோன்றா விட்டால் அது மனமே அல்ல, எண்ணங்கள் அற்ற மனம் என்பதும் சாத்தியமே இல்லை. எண்ணங்கள் தோன்றி மறைவதைத்தான் மனம் என்றே சொல்லுகிறோம்" என்றார் ஞானி.

''அப்படியென்றால் எண்ணமற்ற நிலையை அடைந்து விடுதலை பெறுவது எப்படி?'' என்றான் இளைஞன்.

''எண்ணமற்ற நிலையை அடைய வேண்டும் என்பதும் உன் எண்ணம்தானே?" என்றார் ஞானி.

இளைஞனுக்கு ஞானி கூறுவது நியாயமாகப் பட்டது. குழப்பமாகவும் இருந்தது.

ஞானியிடம் கேட்டான்:

"எப்படி என் மனப்பிரச்சினையில் இருந்து விடுபட்டு விடுதலை பெறுவது?"

"புறக்காட்சிகள் எப்படி கண்ணாடியில் பிம்பமாக பிரதிபலிக்கிறதோ அப்படித்தான் புற நிகழ்வுகள் அகக் கண்ணாடியான மனதில் எண்ணங்களாகவும் பிரச்சினைகளாகவும் பிரதிபலிக்கிறது...

"கண்ணாடியில் தோன்றும் பிம்பத்தை சரி செய்ய வேண்டிய கடமை எதுவும் நமக்கு இல்லை, தேவையென்றால் பிம்பத்தைப் பார்த்து நம் தலைமுடியை சரிசெய்து கொள்ளலாம்...

''அதுபோலத்தான் மனதில் தோன்றும் பிம்பங்களான எண்ணங்களையும் பிரச்சினைகளையும் நீ ஒன்றும் செய்யத் தேவையில்லை. தேவையென்றால் இதனைப் பயன்படுத்தி புறக்காரியங்களில் ஈடுபடு" என்றார் ஞானி.

மீண்டும் கேட்டான் இளைஞன்: "அப்படியென்றால் எண்ணங்களில் இருந்து விடுபடுவது என்பது?"

"எண்ணங்கள் என்பது மனதில் பிரதிபலிக்கும் பிம்பங்கள் என புரிந்து கொண்டு அவைபோக்கில் வந்து செல்ல விடுதலை கொடுத்தால், அவை உனக்கும் விடுதலை கொடுத்து விடும்" என்றார் ஞானி.

இளைஞன் நன்கு புரிந்து கொண்டான். எண்ணங்களைக் கட்டுப்படுத்துவதை கைவிட்டான். எண்ணங்களிலிருந்து விடுபட்டான்.

**"மனம் மனதிடம் இருந்து விடுபடுவதே விடுதலை..."**

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555